Imso403

# "ஒற்றுமை"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்."—திருக்குறள்.


புஸ்தகம் V
Vol. V

1925ஆு ஏப்ரல்மீ

சஞ்சிகை 6
Issue 6


அருணகிரிநா தரருளிய

## நன்முருகாற்று *

கந்த னெந்தை கருத்துறை கடவுள்
ஒருபிறப் பதனி லிருபிறப் பாளன்
மூன்று வண்ணமாய் முத்தீ வளர்த்து
நான்மறை யோதி ஐவகை வேள்வி
யமைத்தா றங்க முதலெழுந் தோதி
யெண்வகைக் குளோரோன் பதுவாச லொருவகைப் [படுத்திப்
பத்துத் திசைக்கும் பரிவுறப் பகிர்ந்து
எத்திசை யோர்க்கு மினிதுறை கேள்விக்
கங்கையொண் சடையோன் கந்த சுவாமி
கடகரி முகத்துக் கணபதிக் கிளையோன்
திருமான் மருகன் செய்ய சேவகன்
றெய்வ யானையும் வள்ளியுஞ் சிறந்தோன்
குன்றெறி குமரன் குராநிழற் கொற்றவன்
என்று மிளையோன் எத்தினர்க் கெளியோன்
கடம்பணி தாரோன் கந்தனென் சென்னியன்
மூவிரு முகமு முகத்திரு கண்ணும்
ஆறிரு புயமு மழகிய முறுவலுங்

---

* இயல் முருகாற்றென்பது பிரதிபேதம்.

காதா ரிசட்டியுங் கவச குண்டலமும்
பவள மேனியும் துகளறு மார்பும்
விளங்கு மணியாரமும் வீரப்பிர தாபமுஞ்
சிவாய நமவெனுந் திருநீற்றுக் காப்புங்
கண்டனுக் கினிய கலைதெரி முருகன்
வேண்டார் தமைச்சூர் வினைக்கிளை யறுத்தும
அண்டர் பயந்தீர்த் தமராபதி யேற்றியுங்
குதிரை முகத்தின் குன்றைக் கெடுத்தும்
மதுரை நக்கீரர் வடிதமி ழாய்ந்து
முருகாற்றுப் படைத்து முகமலர்ந் தருளியுந்
திருச்செவி சாத்தியும் † வான்சிறை விடுத்தும்
அஞ்சினோர்க்கு முன்னடைந் தருளியுங் கவவினை
ஓங்காரத்தை யருளியு முணர்ந்துட னிற்றலுஞ்
சரவண பவனே சண்முகா வென்றுங்
குரவணி புயனே குமரா வென்றும்
பத்தியடி யார்க்குப் பழம்பொரு ளளித்தும்
முத்தி தானருளு முழுமுதற் சுடரே.

அமரர் சிறைமீட்ட வாறிரண்டு தோளுந்
தமரமிகுந் தண்டையந் தாளுங்—குமரன்
றிருக்கை வேலுமயிலுஞ் சிந்தித்து நெஞ்சே
யிருக்கவே போமே யிடர்.

நன்முருகாற்று முற்றிற்று.



பிழைதிருத்தம்.

புத்தகம் 5. சஞ்சிகை 5. பக்கம் 131. வரி 12. பிழை கருதவரைப்—திருத்தம் கருதலரைப். பக். 132. வரி 1. பிழை பாக்களேன்—திருத்தம் பாக்களன்றென. ந. சி. க.

---

† சாய்த்து, பி—ம்.

# திருஞான சம்பந்தர்.



(4-ம் தொகுதி 326-ம் பக்கத்துத் தொடர்ச்சி.)

இதைக் கண்ட அரசியும் முதன் மந்திரியும் ராஜனுடைய கஷ்டத்தைப் பார்க்க சகிக்கக் கூடாதவராகி அவரை அணுகி 'திருஞான சம்பந்தர் நமது மடத்தில் வந்து தங்கியிருக்கிறார். அவரை இப்பொழுது அழைத்துவந்து தங்கள் நோயின் குணத்தை அறியச் சொல்லலாம் என்ற யோஜனை எங்களுக்குத் தோன்றுகிறது. தாங்கள் அனுமதி கொடுத்தால் நாங்கள் அவ்வாறே அவரை இங்கு அதிசீக்கிரம் அழைத்துவரச் செய்கிறோம்' எனப் பிரார்த்தித்தனர். வலியின் கொடுமையால் பாண்டியனும் அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கினான். சில தூதரை யனுப்பி திருஞான சம்பந்தரை அழைத்துவரச் சொல்ல அவரும் வந்துசேர்ந்தார். ஆனால் இவருக்கு முன்னமே சமணர்களில் சமர்த்தரான சில வைத்திய பண்டிதர்களும் வந்திருந்தார்கள் எனச் சொன்னேன். சமணர்கள் 'நாங்களே வியாதியை சொஸ்தம் பண்ணி விடுகிறோம் பாருங்கள் எனச் சொன்னார்கள்'. ஆனால் பாண்டிய ராஜன் அவர்களைப் பார்த்து, 'நீங்கள் எனது இடது பக்கத்து வலியைப் போக்கடியுங்கள். ஞான சம்பந்தர் எனது வலது பக்கத்து வலியைப் போக்கடிக்கட்டும்' எனச்சொன்னான். உடனே சமணர்களைச் சார்ந்த வைத்தியர்கள் பாண்டியராஜன் இடது பக்கத்தினருகில் உட்கார்ந்து அநேக மருந்துகள், எண்ணெய்கள், பச்சிலைகள், திராவகங்கள் போட்டுத் தேய்த்துக்கொண்டேயிருந்தார்கள். எவ்வளவு தேய்த்தும் பயன்படவில்லை. முன்னைக் காட்

டி-லும் வலி உபத்திரவம் அதிகம் ஏற்படுகிறதென்று இராஜன் கத்தினன். சம்பந்தரோ தமது கடவுளை உள்ளத்தில் நினைத்து கைநிரம்ப விபூதி எடுத்து, சில மந்திரங்களை உச்சரித்து, வலது பக்கம் முழுமையும் சிரசிலிருந்து உள்ளங்கால் வரைக்கும் விபூதியால் தடவினர். அது தான் தாமதம்! சரேலென அரசன், 'இதென்ன ஆச்சரியம். இந்தப் பக்கம் வலிகுறைவு காண்கிறதே' எனச் சொன்னன். மறுபடியும் மறுபடியும் ஆக மும்முறை விபூதி பூசவே வலது பக்கம் முழுமையும் வலியே இல்லாமற் போயிற்று. ஆனல் இடது பக்கத்து வலியோ முன்னிருந்ததைக் காட்டிலும் இரண்டு மடங்காயிற்று. அங்கிருந்த சமணர்களைப் பார்த்து 'போதும் உங்களது வைத்தியம்; வலி அதிகரிக்கிறதே தவிர குறையவே காணேமே, ஞானசம்பந்தரே இடது பக்கத்து வலியைப்போக்கடிக்கட்டும் எழுந்திருங்கள் சற்றுத் தள்ளியிருங்கள்' என சினந்தான். அப்படியே சம்பந்தரும் சம்மதித்தார். இடது பக்கத்தில் உட்கார்ந்து ஈஸ்வரனைத் தியானித்து விபூதியைத் தடவவே வலியெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் மறைந்துவிட்டது. பாண்டியன் படுக்கையிலிருந்து எழுந்தவன்போல் சுலபமாக எழுந்தான். சம்பந்தரை வணங்கித் துதித்தான்.

சமணர்களுக்கோ இது பொறுக்கமுடியவில்லை. அவர்கள் துவேஷம் அதிகரித்தது. அவர்கள் பாண்டியனிடம் சென்று, வியாதியை நாங்களே குணமாக்கி யிருப்போம். அது எங்களுக்கு ஒரு கஷ்டமுமில்லை. தாங்கள் அவசரப்பட்டு விட்டீர்கள். ஆனல் அந்த ஒரு காரணத்தைக் கொண்டு சம்பந்தர் மதத்தைக் கொண்டாடுவது சரியல்ல. வேறொரு பரீக்ஷை ஏற்படுத்துங்கள். அதில் எவர்கள் ஜயம் அடைகின்றனரோ அவர் மதமே சிறந்தது, உயர்ந்தது எனக் கொள்ளலாம்' எனத் தெரிவித்துக்

கொண்டார்கள். பாண்டியன் சற்றே யோசித்து அப்படியே செய்யலாம். மற்றொரு பரீக்ஷை ஏற்படுத்துகிறேன் எனச் சொல்லி அவர்களை யனுப்பி விட்டான்.

பூரணமாக ஈஸ்வரனையே தியானம் செய்யும் பக்தர் திருஞான சம்பந்தருக்கு எத்தனை பரீக்ஷைகள் ஏற்படுத்தி ஞலென்ன? பாண்டியராஜன் சம்பந்தருக்கும் சமணருக்கும் ஏற்படுத்திய இரண்டாவது பரீக்ஷைகளைச் சொல்லுகிறேன். கேளுங்கள்.

அதாவது இரண்டு கக்ஷியாரும் தங்கள் தங்கள் மதக் கோட்பாடுகளையும், அருமை பெருமைகளையும் ஓர் ஓலையில் எழுதி அனல் எரியும் குழியில் போடவேண்டும். எவர்கள் ஓலையானது அத்தீயில் எரிந்து சாம்பலாய் விடுகிறதோ அவர்களே தோற்றவர்களென்றும், எது அக்கினி பகவானிடத்திலும் தன் சொரூபத்தை அதிகப் பிரகாசிக்கச் செய்கின்றதோ அவர்களே வெற்றியடைந்தவர்களென்றும், அவர்கள் மதமே உயர்ந்ததென்றும் நாம் கொள்ளுவோம் என்று இருகட்சிக்காரரும் முடிவுக்கு வந்தார்கள்.

பிள்ளைகளே! ஏதாவது ஒரு சாமானை அக்கினியிலிட்டால் அது எரியாமல் முன்னிலும் அதிகம் பிரகாசிக்கிறதுண்டோ? நொடிப்பொழுதில் அனலில் அகப்பட்டது அதோடு சேர்ந்து இருந்தவிடம் தெரியாமல் போய்விடுமேயல்லாது பிறகு சாவகாசமாக தீ அவிந்தபிறகு பார்த்துப் பொறுக்கி எடுத்துக் கொள்ளலாமென்று இருப்போர் உலகில் உளரோ? நீர் அறியீர். இந்தப் பரீக்ஷைக்கு திருஞானசம்பந்தனுகிய பாலபக்தனும் சம்மதத்தைத் தந்தனனே. ஒருவேளை சமணர்கள் இவரை ஏமாற்ற இம்மாதிரி புது எண்ணங்கொண்டார்களோ நாம் அறியோம். இது நிற்க,

பரீக்ஷைக்கு ஏற்பட்ட நாள் வந்து சேர்ந்தது. இந்த

அற்புதத்தைப் பார்க்க சிவனடியார் திருக்கூட்டங்களும், சமணர்களைச் சார்ந்தவர்களும் திரண்டு வந்து சேர்ந்தார்கள். பாண்டியராஜனும் தன் இராணியுடன், மந்திரிகள், புடை சூழவும் குறிப்பிட்ட நேரத்தில் அங்கே வந்து சேர்ந்து தனக்குரித்தான ஆசனத்தில் அமர்ந்து என்ன நடக்கப் போகிறது என்று அறிய ஆவலாய் இருந்தான். இரு கக்ஷிக்காரரும் அரசன் ஆணையைமுன்னிட்டு தாங்கள் எழுதி வந்த ஏட்டை அக்கினி பகவானுக்கு அர்ப்பணம் பண்ணினார்கள். க்ஷணப்பொழுதில் சமணர்கள் இட்ட ஏடு இருக்கிறவிடந்தெரியாமல் எரிந்து சாம்பலாயிற்று. திருஞான சம்பந்தர் சமர்ப்பித்த ஏடு அக்கினியில் எரியாமலிருந்தது. அதனுள் எழுதிய எழுத்துகள் முன்னிலும் பிரகாசமாகக் காணப்பட்டன. இது என்ன ஆச்சரியம்!

பாண்டிய ராஜன் இருவரையும் நோக்கி அவர்கள் ஏட்டை எடுத்துவரும்படி கட்டளையிட்டான். சமணர்களோ வெட்கி கையைப் பிசைந்து ஒன்றும் பேசமுடியாமல் நிற்கிறார்கள். பால பக்தன் சிவ நாமத்தை செபித்துக்கொண்டு அக்கினியில்துள்ளித் துள்ளிஎழும்பும் தன் ஏட்டை எடுத்து வந்து பாண்டியன் கையில் கொடுக்க, பாண்டிய ராஜனும் மற்றுமுள்ளோரும் ஆச்சரியம் அடைந்து கரகோஷம் செய்து ஆரவாரித்தார்கள். சம்பந்தரைக் கொண்டாடினார்கள். அவரை வாழ்த்தினார்கள். முன்னிலும் பன்மடங்கு அவரைப் புகழ்ந்தார்கள்.

சமணர்களோ அரசனை அணுகி, ராஜாதி ராஜனே! எங்கள் ஏடு எரிந்துபோனாலும் நாங்கள் தோற்றவர்கள் என்று அறிய வேண்டாம். எந்தக்காரியத்தையும் மும்முறை செய்துபார்த்துத் தீரவிசாரிக்கவேண்டும். ஆகையால் மூன்றாவதாக ஒரு பரீக்ஷை ஏற்படுத்தி அதிலும் வெல்லுகிறாரோ அவரையே உயர்ந்த மதத்தினராகக்கொள்ளலாம்

என்றார்கள். எந்த நிமிஷமும் சிவபெருமான் அன்புக்கு ஈடு பட்ட திருஞானசம்பந்தர் பின்வாங்கினாரில்லை. எல்லாம் ஈசன் செயல், நம்மால் ஆவது ஒன்றுமில்லை எப்பொழுதும் அவரையே பூரணமாக நம்பியிருப்போம். சிவாயநமவென்று சிந்தித்திருப்பார்க்கு அபாயமொன்று மில்லை, என்பது பழமொழி.

கடைசியாக ஏற்படுத்தியுள்ள பரீக்ஷை வருமாறு. பாண்டியநாட்டில் வைகை என்ற புண்ணிய நதி ஓடுகிறது. அதில் சமணர்களும் திருஞானசம்பந்தரும் தங்கள் மதப் பெருமைகளை ஓர் ஓலையில் எழுதிப் போடவேண்டும். எவர்கள் ஓலை ஆற்றில் தண்ணீரோடு ஓடுகிறதோ அவர்கள்மதம் மதிக்கத்தக்கதல்ல தென்றும் அவர்கள் ஓலை தண்ணீரை எதிர்த்து ஓடிவருகிறதோ அவர்கள் கொண்டுள்ள மதமே விசேஷமானதென்றும் ஒருவாறு தீர்மானித்துவிட்டார்கள்.

பிள்ளைகளே! இதுவும் ஒரு ஆச்சரியமே! தண்ணீரை எதிர்த்து ஏதாவது ஒருசாமான் வரமுடியுமா? நீரின்வேகத் தைத் தடுக்கமுடியுமா? சாதாரண மனிதனால் சகிக்கக் கூடிய காரியமா? அதுவும் கேவலம் ஓர் ஓலை எப்படி எதிர்த்து வரமுடியும்? எப்படியிருந்தாலென்ன? இந்த முடிவிற்கு இரண்டு கக்ஷிகளும் சம்மதம் தந்துவிட்டனர். குறிப்பிட்ட தினம் வைகை ஆற்றங்கரை இருபுறங்களிலும் கணக்கிடக் கூடாத கூட்டங் கூடிற்று. விந்தையே விந்தை! பாண்டிய அரசன், அரசி, மந்திரிகள் முதலானோர்களும் வந்து சேர்ந்தார்கள். சமணர்களின் தலைவரும் ஞானசம்பந் தரும் தங்கள் தங்கள் ஏட்டை எழுதிக் கையில்வைத்துக் கொண்டு நீரில் போட அரசன் உத்தரவை யெதிர்பார்த் திருந்தார்கள். ஞானசம்பந்தர் ஞாபகம் முழுமையும் பரம்

பொருளாகிய ஈசனிடத்திலேயே அமைந்திருந்தது. அன்று தினம் திடீரென்று வெள்ளம் இருகரையும் புரண்டு வந்தது. வந்திருந்த ஜனங்கள் எல்லோரும் 'அணைபோடக்கூடாத வெள்ளத்தில் இவர்கள் ஓலை எம்மூலையோ' என்றும் சிலர் 'எம்பெருமானின் பெருமையே பெருமை! சோதிக்க வந்த நாளில் தெய்வமும் சோதிக்கிறதே! எதுவும் நன்மையைக் குறித்தே இம்மாதிரி நடக்கிறது போலும்' என்று சொல்லி சம்பந்தர் முகத்தைப் பார்த்தவர்களாகவே இருந்தார்கள். திடீரென்று ஓர் மணி அடிக்கப்பட்டது; அது தான் இருவரும் ஓலையை ஆற்றில் இடவேண்டிய காலம். அப்படியே அவர்கள் ஓலையை வெள்ளத்திலிட்டார்கள். ஞானசம்பந்தர் எம்பெருமானை நினைத்துத் துதித்துக் கொண்டிருந்தார். சமணர்களிட்ட ஓலை வெள்ளத்தில் சுழன்று சுழன்று, ஒரு தரம் நீரிற்குள் சென்றும், மறுபடி வெளிவந்தும் வெள்ளத்தோடு அடித்துக்கொண்டு போகப்பட்டு சற்று நேரத்தில் பார்த்திருந்தவர்கள் கண்ணுக்கும் மறைந்துவிட்டது. சமணர்கள் நாணம் மேலிட்டு தலை குனிந்தவராய் ஒவ்வொருவராய் பின் வாங்கினார்கள். சம்பந்தரிட்ட ஏடு வெள்ளத்தை எதிர்கொண்டு,சற்றேனும் தண்ணீரோடு அடித்துக்கொண்டு போக இடங்கொடுக்காமல், வந்துகொண்டேயிருந்தது. இப்புவியில் இதுவும் ஒரு புதுமையோ? சிவனடியார் கணங்கள் சந்தோஷிக்க, சமணர்கள் கூட்டம் மனம் கொதிக்க பார்க்கவந்திருந்தவர்கள் அளவில்லாத ஆச்சரியம் அடைய பாண்டியராஜன் இருக்குமிடம் விட்டெழுந்த சம்பந்தரை வணங்க எல்லோரும் பிரமித்து நின்றார்கள்.

S. ஜெகன்னாதன்,
கிண்டர்கார்டன் உதவிபோதகர்,
டீசர்ஸ் காலேஜ், சைதாப்பேட்டை.

# மனோசக்தி

மனோசக்தி என்பது மனத்தின் வல்லமை என்பர். மனத்தின் வல்லமையினாற்றான் எக்காரியமும் இவ்வுலகில் நடைபெறுகின்றது. மனோசக்தி இல்லாத ஒருவன் எக்காரியத்தையும் செய்யமுடியாது. குன்றாத ஊக்கத்தையளிப்பது மனோசக்தியேயாம். எவனிடத்தில் மனோசக்தியானது மிகுந்து காணப்படுகின்றதோ அவன் ஏனையோரால் ஆகாத காரியத்தையும் தான் செய்துமுடிக்கின்றான். அவ்வாறு அவன் அக்காரியத்தைச் செய்துமுடிப்பதற்குக் காரணம் அவனுடைய எண்ணம். எண்ணத்திற்குக் காரணமாயிருப்பது மனம். அம்மனத்தின் சக்தியே மனோசக்தி யென்பதை நாம் அறிவோம். அச்சக்தி எல்லோரிடத்திலும் இருக்கின்றது. ஆயினும் அச்சக்தி யாவரிடத்தும் சமமாகக் காணப்படாது. சிலரிடத்து மிகுந்தும், பலரிடத்துத் தாழ்ந்தும் காணப்படுகின்றது. மனோசக்தியில்லாத மனிதனே இரானென்று கூறலாம். ஆனால் மனோசக்தியை அதிகமாக உடைய மனிதன் எக்காரியத்தையும் எளிதில் செய்கிறான். அச்சக்தி குறைந்தவனோ அவ்வாறுசெய்ய இயலாது போகின்றான். உற்சாகத்துடனும் ஊக்கத்துடனும் இடையறாது பல அருமையான காரியங்களைச் செய்கிறவன் எவனோ அவனிடத்தில் மனோசக்தி மிகுந்திருக்கிறதென்னலாம். எக்காரியத்திலும் தளராத ஊக்கமுடையவன் எவனோ அவனே மனோசக்தியை அதிகமாக உடையவனென்று கூறுவதைத்தவிர மனோசக்தி இத்தகையதென்

றும், அஃது இவ்வாறு இருக்குமென்றும் எடுத்துக் காட்ட எவராலும் இயலாது. எல்லாவற்றுக்கும் மேலான பகுத்தறிவையுடைய மனிதர்கள் அவ்வறிவின் துணைகொண்டு தங்கள் மனோசக்தியை விருத்தி செய்துகொள்ள வேண்டும். சோம்பேறியினிடத்தில் மனோசக்தியாகிய விளக்கு அவிய ஆரம்பித்திருக்கின்றது எனக் கூறலாம். சுறுசுறுப்புடையவனிடத்தில் மனோசக்தியாகிய விளக்குச் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றது என்று சொல்லலாம். சிலர் குன்றாத ஊக்கமே மனோசக்தி என்பர். அற்றன்று. மனோசக்தியினால்தான் ஊக்கந்தோன்றுகிறது. ஆனால், சாமானியர் மனோசக்தி என்பதைவிட ஊக்கம் என்று கூறினால்தான் எளிதில் அறிந்துகொள்ளுவார்கள். மனோசக்தி ஊக்கத்தையளித்து மனிதன் எண்ணும் காரியத்தை முற்றுவிக்கின்றது- அவ்வூக்கம் மனோசக்தியின் உயர்வு தாழ்வுக்கேற்ப, ஒரு காரியத்தைச் செய்ய எண்ணத்திற்குத் துணையாய் நிற்கின்றது. எக்காரியமும் பழக்கத்தினால் விருத்தியடைவதைப்போல் மனோ சக்தியும் பழக்கத்தினாற்றான் விருத்தியடையும். மனிதர்களுக்குத் தோன்றுகிற எண்ணங்களுக்கெல்லாம், அவர்கள் செய்கிற வேலைகளுக் கெல்லாம் காரணமாயிருப்பது அவர்களுடைய மனோசக்தியேயாகும். அச்சக்தியை அநேகர் நல்லவழியிலும் உபயோகிக்கிறார்கள். துர்வழிகளிலும் உபயோகிக்கிறார்கள். மனம் போகும் வழியில் அதன் ஏவலாளைப்போல் மனோசக்தி பின்சென்று அது கட்டளையாகும் காரியத்தைச் செய்து முடிக்கும். ஆகையால் மனோசக்தியை வளர்க்கும் ஒவ்வொருவரும் அச் சக்தியை அறிவின் துணைகொண்டு, நல்வழியில் உபயோகிப்பதே நலம். இன்றேல் விளைவது தீமையேயாம்.

மனோசக்தி எவரிடமிருந்து காணப்படுகிறதோ அவர் ஒரு காலத்தில் மேன்மையடைவர் என்பது திண்ணம். மனோசக்தி இயற்கையில் எல்லோரிடத்திலும் இருக்கின்றது. ஆனால் அதன் தன்மையை உணர்ந்து அதை மேன்மேலும் விருத்திசெய்கிறவர்கள் பலனடைகிறார்கள். குழந்தைப் பருவத்திலிருந்தே ஒருவனிடம் மனோசக்தி வளருமானால் அது பிற்காலத்தில் மிகுதியும் பயனளிக்கும். அடித்தும், உதைத்தும், பயமுறுத்தியும் வளர்க்கும் குழைந்தைகளிடத்தும் உற்சாகமில்லாத குழந்தைகளிடத்தும் மனோசக்தி அதிகமாக வளருமென்பது குதிரைக் கொம்பே யாகும். மனோசக்தியை மிகுதியாகவுடையவர்கள் ஏழைக் குடியில் பிறந்தவர்களாயினும் நாளடைவில் அறிவுடையோரும் அரசருங்கண்டு புகழக்கூடிய நிலையை அடைவர் என்பது திண்ணம். திருவாரூருக்குச் சமீபத்தில் உள்ள உச்சுவாடி என்னும் கிராமத்தில் இருந்த ஓர் ஏழை பிராமணருக்குப் பிறந்த கனம் முத்துசாமி ஐயர் பிற்காலத்தில் சென்னையில் உள்ள உயர்தர நீதிஸ்தலத்தில் உயர்தர நீதிபதியாய் திகழ்ந்ததற்குக் காரணம் அவரிடம் மிகுந்து காணப்பட்ட மனோசக்தியேயாகும் என்பது அவருடைய சரித்திரமறிந்தார் அனைவருக்கும் தெள்ளிதில் விளங்கும். பூண்டி அரங்கநாத முதலியார் பெரும் புலமைபெற்று விளங்கியதற்கும் காரணம் அவரிடமிருந்து காணப்பட்ட மனோசக்தியேயாகும்.

சிவாஜி என்னும் பெயரினையுடைய மகாராஷ்டிர அரசர் சிறு குழந்தையாயிருக்கும்போது அவர் தாயார் அவருக்குப் பாரத ராமாயணக் கதைகளைச் சொல்லிவரும்போது அவர் பிற்காலத்தில் தாமும் அக்கதைகளில் சம்பந்

தப்பட்ட வீரர்களைப்போல் ஆகவேண்டுமென்று தீர்மானித்தார். அத்தீர்மானம் ஒருபோதும் அவர் மனதைவிட்டகலவேயில்லை. அதோடு அவருக்கிருந்த மனோசக்தியும் அளவுகடந்ததாகும். அதனால் அவர் பிற்காலத்தில், தமது தகப்பனார் அடங்கி உத்தியோகம் செய்துகொண்டிருந்த பிஜப்பூர் மன்னரையும், வேறு மன்னர்களையும், தமக்கு அடங்கி நடக்கும்படி செய்து தாம் வீரத்திலும், புகழிலும் சிறந்து அரசர்களுக்கு அரசராய் விளங்கினார்.

மனோசக்தி யுடையவன் தேகபலமற்றவனாயினும், மனோசக்தியற்ற தேகபலமுடையவனைக் காட்டிலும், எக்காரியத்திலும் சிறந்து விளங்குவானென்பது திண்ணம். மனோசக்தி எக்காரியத்திலும் ஒருவனைச் சிறந்து விளங்கச் செய்கின்றது. மனோசக்தி யுடையவன் தான் பிறந்த இடம் குடிசையாயினும் அதைச் சிறந்த மாளிகையாக்குவான்.

அரசர்கள் ஒருவரோடொருவர் சண்டையிடுங் காலங்களில் சைனியங்களை அதிகமாக வுடையவன் ஜெயமடைவான் என்பதே அநேகரின் அபிப்பிராயமாயிருந்துவருகிறது. அது தவறு. சிறிது சைனியங்களை உடைய அரசனாயிருந்தபோதிலும் அவனுக்கு நாம் ஜெயமடைவோம் என்னும் நம்பிக்கையோடு கூடிய மனோசக்தி யிருக்குமானால் அவன் ஜெயமடைவது திண்ணம். உலகத்தில் நடந்த யுத்தங்களில் பாதிக்கு மேற்பட்டவைகளில் ஜெயம்பெற்றவர்கள் மனோசக்தியைக்கொண்டு ஜெயம்பெற்றார்களென்று கூறுவதற்கு இடமிருக்கிறதேயன்றி சைனிய பலத்தையும் ஆயுதபலத்தையும் கொண்டல்லவென்பது ஆராய்ச்சியுடையார்க்குப் புலனாம். எந்தச் சாதியாரிடம் மனோசக்தி மிகுந்து காணப்படுகின்றதோ அந்தச் சாதியாரும், எந்தத்

தேசத்தாரிடம் மனோசக்தி மிகுந்து காணப்படுகின்றதோ அந்தத் தேசத்தாரும் முன்னேற்றமடைவர் என்பது திண்ணம். எவனிடத்தில் துரெண்ணமும் வஞ்சகமும் நிறைந்திருக்கின்றதோ அவனிடம் மனோசக்தி ஓங்கிவளராது. மனோசக்தியை விரும்புகிறவன் ஒழுக்கமுடையவனாதல் அவசியம். மனோசக்தி உடையவனைத்தேடி அதிர்ஷ்டம் தானே வருமென்றுங் கூறலாம். மனோசக்தியுடையவன் எக்காரியத்தையும் எளிதில் செய்வான்.

முதன் முதல் இந்தியா இங்கிலீஷ்காரர் வசப்படுவதற்கு அடிகோலினவராகிய இராபர்ட் க்ளைவ் என்பவர் பிளாசி என்னும் யுத்தத்தில் மிகச் சிறிய சைனியத்தோடு சுராஜ் உட்-டௌலாவை எதிர்த்தார். சுராஜ் உட் டௌலாவுக்கோ கிளைவுக்கு இருந்ததைவிடப் பதின்மடங்கு சைனியங்கள் அதிகமாய் இருந்தன. இருந்தும் யாது பயன்? சுராஜ் உட் டௌலாவுக்கு மனோசக்தி குறைவு. பயங்காளி. அதனால் அவன் மனோசக்தியை மிகுதியாகவுடைய கிளைவுக்குத் தோற்று ஓடும்படியாயிற்று. அதுமட்டுமா?

தேசிங்கு ராஜனைப்பற்றிக் கேள்விப்படாதவர் நந் தமிழ்நாட்டில் இரார் என்பது திண்ணம். ஆறுகாடு நபாபாகிய சாதத்துல்லாகான் என்பவன் தேசிங்கின்மீது திரண்ட சைனியங்களோடு படை எடுத்து வந்தான். அவனோடு இறுதியாகச் சென்று போர்புரிந்து வெற்றிகொண்டவன் தேசிங்கு ஒருவனேயாவன். அதற்குக் காரணம் என்ன? தேசிங்கினிடம் மிகுந்து காணப்பட்ட மனோசக்தியேயாகும்.

மகாபாரதத்தில் அர்ச்சுனனுடைய குமாரனாகிய பதினாறு வயதினையுடைய அபிமன்யு செய்த யுத்தத்தின் பெரு

மையைப் புகழாதார் இன்றளவும் எவருமிலர். அவனு டைய அத்தகைய யுத்தவன்மைக்குக் காரணமாயிருந்த தும் அவனுடைய மனோசக்தியேயாம்.

மனோசக்தியில்லாத கல்விமான் புகழடைவதில்லை; மனோசக்தியற்ற ஏழை முன்னேற்றமடைவதில்லை.

உண்மைப்பொருளை அடைவதற்கும் மனோசக்தியே துணையாகும். மனோசக்தியுடையவன் 'என்னால் முடியாது, என்னால் ஆகாது' என்னும் பதங்களை ஒருபோதும் சொல் லமாட்டான்.

பிரான்சு தேசத்திற்குப் புத்துயிர் அளித்தவனாகிய நெப்போலியன் என்பவனிடத்தில் மனோசக்தி மிகுந்து காணப்பட்டது. அதனால் எந்தக்காரியத்தையும் அவன் அசாத்தியம் என்று வெறுத்துத் தள்ளியதில்லை. 'அசாத் தியம்' என்னும் வார்த்தையை அவன் தன் கொடிய பகை வனை வெறுப்பதைப்போல் வெறுத்தான். அகராதிகளி னின்றும் அப்பதத்தை ஒழித்துவிடுவது தேசத்திற்கு நன் மையாகும் என்பான். தன்கீழுள்ள வேலையாட்கள் ஒரு காரியத்தைச் செய்யும்போது சோர்வுற்றார்களானால் 'மனோசக்தியுடைய மனிதனால் ஆகாததொன்றில்லை. ஆகை யால் விடாமுயற்சியுடன் எடுத்த காரியத்தைச் செய்து முடியுங்கள்' என்பானும். வித்துக்குள் மரம்போல் மனி தர்களுடைய மனதில் மறைந்துகிடக்கும் மனோசக்தி நெப்போலியனிடத்தில் தான் அதிகமாயிருந்தது என்று அவனுடைய சரித்திரத்தை எழுதிய ஆசிரியர் கூறுகின் றார். 'குன்றாத ஊக்கமே மனோசக்தி உண்டென்பதற்கு அடையாளம்' என்பது நெப்போலியன் அடிக்கடி கூறுகிற

வார்த்தைகளில் ஒன்றும். மனோசக்தி யுடையோரால் ஆகாத காரியம் ஏதுமில்லை என்பதை அவன் சரித்திரத்தில் சந்தேகமறக் காணலாம். அவன் சாதாரணக் குடியிற் பிறந்து பிரான்சு தேசத்துப் போர்வீரர்களின் ஒருவனுகச் சேர்ந்து மனோசக்தியினுல் பிற்காலத்தில் பிரான்சு தேசாதிபதியானுன். பின்னர் மனோசக்தியற்ற அரசர்கள் பலர் ஒவ்வொருவராக அவனுக்கு அடிபணிந்தனர். ஒரு சமயம் அவன் படையெடுத்துப்போகும் போது 'ஆல்ப்ஸ் மலை' குறுக்கேயிருந்தது. அதுகண்ட நெப்போலியன் 'ஆல்ப்ஸ் மலை ஒழியக்கடவது' என்று கூறி அதுவரையில் போக்கு வரவற்றிருந்த அம்மலையில் வழியுண்டாக்கினுன். அப்போது அவன் 'அசாத்தியம் என்னும் பதத்தை அறிவிலிகள் தாம் கூறுவார்கள்' என்றனனும். அவன் எழுதுவதில் கைதேர்ந்த நான்கு பெயருக்கு ஏககாலத்தில் வெவ்வேறு விஷயங்களைத் தொடர்ச்சியாக ஓய்வின்றிச் சொல்லிக்கொண்டு வருவானும். அவ்வாறு சொல்லிக் கொண்டு வரும்போது எழுதுகிற நால்வரும் களைப்படைந்தாலும் அவன் களைப்படைவதில்லை என்கிருர்கள். என்னே மனோசக்தியின் திறமை! அவன் ஒரு சமயத்தில், 'நான் என் மனோவல்லமையினுல் சாமானியர்களை யெல்லாம் சிறந்த தளபதிகளாக்கி யிருக்கிறேன்' என்று சொல்லியிருக்கிருன். ஆயினும் முடிவில் அவன் எண்ணிய சுயநலத்தை அதிகமாக விரும்பச் சென்றபடியினுல் அவன் கெடும்படியாயிற்று. ஆகையினுற்றுன் மனோசக்தியை விரும்புகிறவர்கள் ஒழுக்கமுடையவர்களா யிருக்கவேண்டுமென்று முன்னர்க் கூறினோம்.

மனோசக்தியுடையவன் தனக்கும் பிறர்க்கும் உபகாரி

யாகின்றான். அவனைக் கண்டு மற்றவர்களும் அவனைப் போலாக முயல்கின்றனர்.

நமது நாட்டார் மனோசக்தியால் சிறந்து விளங்குவார்களானால் நமது நாடு விரைவில் எவ்வகையிலும் முன்னேற்றமடைவது திண்ணம்.

எஸ். எஸ். அருணகிரிநாதன், தமிழ்ப் பண்டிதன்,
தொண்டைமண்டலம் துளுவவேளாளர் உயர்தர பாடசாலை
சென்னை.



# ஆளப்பிறந்தவன் ஆளுவன்.

(91-ம் பக்கத் தொடர்ச்சி)

இம்மொழியுடன், வாலிபனை அவ்விடம் விட்டு, அவன் மாத்திரம் அகன்றான். இளைஞனின் எழிலை இமைகொட்டாது நோக்கி நின்றான் வேந்தன். பார்க்கப் பார்க்க கவலை பெருகிற்று. தான் முன்பு இழைத்த தீங்கை எண்ணினான். அது பயன்படாமற் போக பாராளனின் மனம் பெருந்திகில் கொண்டது. அதனால், தான் பருகியது சாராயந் தானோ அல்லது மற்று யாதேனுமோ என்னும் ஐயம் பிறந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் மாவரைப்போன் தன் மனையாட்டியுடன் வந்து “அருமைக் காதலியே! அரசனுக்கு அவ்விளைஞனையடைந்த வரலாற்றை ஆதியோடந்தமாகப் பகருவாய்” என்று கட்டளையிட்டான்.

அவ்வாறே, அன்னவளும் வயதில் மேம்பட்டவளாயினும், அரசன் முன்னிலையில் நாணம் மிகுதியும் மேலிட,

சற்று கோழை மனத்துடன் "ஐயனே! இவ்விளைஞனை யான் அடைந்த வரலாறு இதுவே. இற்றைக்கு ஈரேழி யாண்டிற்கு முன்னர், சந்தையிலிருந்து என்வீடு நோக்கிச் சவாரி செய்துகொண்டு வந்தேன். அதோ செல்கின்ற ஓடையை அணுகிய காலத்து, ஓடை நீரிடமிருந்து, மெலிந்த அழுகுரல் ஒன்று என் கருத்தைக் குலைத்தது. குழந்தையின் குரல்போல் தோன்றியது. சென்று இன்ன தென்று நோக்க, எண்ணியவாறேயாயிற்று. நாணலிடைப் பட்டு, ஒரு பெட்டியும் அதனுள் குழந்தை ஒன்றும் கண் களைக் கவர்ந்தன. உடனே என் கோவேறு கழுதையை விட்டிறங்கி, இடுப்பளவுநீரிற் சென்று குழவியைப்பற்றி னேன். குழவியும் பசியினாலும் குளிரினாலும் இடர்ப்பட்டு இறந்துவிட்டதுபோல் இருந்தது. பிறகு கண்டெடுத்த பொருளை என்னில்லம் கொண்டு சேர்த்தேன். எங்களுக்கு மகப்பேறு இல்லாததினால் என் வயிற்றுதித்த மகவெனப் பாராட்டிச் சீராட்டி வளர்த்தேன். பேறும் பெரு மகிழ்ச்சிப் பேறுயிற்று. பகைவேல் எனப் பெயருஞ் சூட்டினேன். ஆனால் என்றேயாயினும் இவன் எம்மைவிட் டுப் பிரிந்துவிடுவான் என்ற எண்ணம் இடையறாது வாட்டு கின்றது. ஏனெனில், அவனது அங்க அடையாளங்கள் அரசகுலத்துக்கு அணித்தாயன. விருப்பமிருக்குமானால் அப்பேழையையும் காண்பிக்கிறேன்" என்று சொல்லி, அதையும் அவன் முன்பு வைத்தாள்.

பெருந்திகில் கொண்ட காவலன் பேதையாயினன். வெண்ணிடம் வரைந்த செவ்வரி உருவமும் மனச்சிறை புகுந்து மயக்கியது.

புவியாளனின் மனத்தே பொதிந்திருக்கும் எண்ணங்

கள் புலர்வதாயின. "அன்று என்னுடனிருந்தவர்களில் இப்பெட்டியை யாவர்—இதுதான் என்று உறுதி கூறும் படி, கவனித்திருப்பர்?" என்று எண்ணினன்.—"உறுதி யாகச் சொல்லுங்கால்—சமயவேல் ஒருவனே; அடவி யின் நீண்ட வழி முழுதும் பெட்டியை மூடியே யெடுத்து வரவில்லையா?—ஓ! அவனன்றி வேறொருவரும் அதைப்பற்றி அணுத்துணையும் அறியார். ஆதலால் இம் மர்மத்திற்குப் பங்கமில்லை" என்று எண்ணித்தேறினன்.

இச்செய்தியைப்பற்றி இதுவே முடிந்த மொழியாகக் கொண்டானேயாயினும் மனத்திடங்கொண்ட இருள் சிறி தும் இறங்கவில்லை. நண்பகல் இரவியின் கொடுமையை யொழித்து இன்புற விரும்பிய இடம் துன்புறச் செய்தது. எண்ணிய சிறு துயிலோ சிறகுபெற்றது. துயரோ விரிந் தது. இவையெல்லாம் தன் குலப்பகைவனைக் கண்டதின் பொருட்டே. ஆகவே அரண்மனைக்கு உடனே செல்ல வேண்டுமென்ருன். காலையிலிருந்த களிப்புடனே இருப் பதுபோல் நடிக்க எடுத்த முயற்சிகளெல்லாம் புளிப்பாய் முடிந்தன. அவனுடனிருந்த செல்வர்கள் யாவரும் காவ லன் கறைபட்டு கலங்குகின்ருன் என்று தெளிவாய்க் கண்டு கொண்டார்கள்.

### 4. பகைவேலும், சமயவேலும்.

மறுநாள் சிறிதுநேரம், வேந்தன் சமயவேலுடன் தனித்து உரையாடினன். ஆகவே சற்றுகழித்து, சமய வேல் அரசன் லாயத்தினின்று வலிமையும் விரைவும்பெற்ற புரவியொன்றைக் கொண்டு, மாவரைப்போன் இல்லம் விரைந்து போனன்.

அக்காலை, பகைவேல் இளைஞன், ஓடையிலே மீன் பிடித்து நின்ருன். மீனை எதிர் பார்த்து நின்று கொண்டி ருக்கையில் மனம் ஆகாசக் கோட்டை யொன்றை யமைத் தது. காவலன் தன்னைக் கண்ணுர நோக்கியதையும், செவி லித்தாய் தனக்குக் கூறியதையும் எண்ணி யெண்ணி நின் ருன். அதனடியாக, பேரெண்ணங்கள் பிறந்து மிதந்தன. வயது வந்த காலத்து தான் செய்யக்கூடும் பெருஞ் செயல்

களை யுன்னி உளமிக மகிழ்ந்தான். தன் தாய் 'வேந்தன் குலப்பிறப்பு' என்றதினல் வேந்தனுக்குரிய நடையுடை பாவனையை அமைத்துக் கொள்வதும் சாலும் என்று எண்ணினன்.

இவ்வாறு ஆகாசக்கோட்டையில் இளைஞன் குடியிருந்து வருஞ்சமயம், அரசனின் பேரூழியக்காரன் அவ்விடத்தை நண்ணினன். வேந்தனையடுத்த வேலைக்காரன் என்பது விளக்கம். அன்னுன் தொப்பியில் நிறங்கொண்ட தோகை வெற்றி முழங்கிற்று. மேற்சட்டையின் ஓரங்களில் தங்கக் கொடிகள் தாவிநின்றன. கச்சையிலிருந்து கத்தியொன்று நீண்டு தொங்கியது. ஈட்டியொன்றும் அருகே செறிந்தது. அதன் பிடியில் பொற்கொடிகள் பச்சிலை தாங்கிப் பூரித்தன. அதனடியைச் சுற்றி வெள்ளிச் சுருள் ஒன்று "வெட்டு! இறந்தவன் எழுவதில்லை" என்று விளம்பிற்று.

புரவியினின்றிழிந்து, "வாலிப! மாவரைப்போன் எங்கேயுளன்? அரச சமுகத்தினின்று செய்தியொன்று அவனுக்கு உளது. அது அநேகமாய் உன்னைப்பற்றித்தான்" என்றான் சமயவேல்.

புற்றரையின்மீது படுத்திருந்த பகைவேல் சடுக்கென்றெழுந்து 'பெரியவரே! என் தகப்பன் வீட்டினுள் உளன். தங்களை அவர்பால் அழைத்துச் செல்வன்" என்று மரியாதை செய்தனன். ஆகவே குதிரையை ஓரிடத்திற் கட்டிவிட்டு, இருவரும் ஒருசிறு மரப்பாலத்தின் வழியாக ஓடையைத் தாண்டினர்கள்.

மாவரைப்போன் வாயிற்படியண்டை நின்று கொண்டிருந்தான். அரசனின் தூதனைக் கண்டதும் தலை சாய்த்து "யான் தங்களுக்குச் செய்யவேண்டிய பணிவிடையாது?" என்றான்.

உடனே தூதனும் "என் அருமை நண்பனே!" என விளித்து, அரசனல் விடுத்த திருமுகத்தைக் கையிற்கொடுத்து "இதை வாசித்து அதன்படி நட" என்றான்.

"மன்னிக்க வேண்டும்—எழுத்து வாசனை யறியாத

வன் யான். அவசியமாயின் என் மனையாட்டியை வாசிக்கச் செய்கிறேன்" என்றான் மாவரைப்போன்.

"இத்திருமுகம் நமது அண்ணலின் அனுப்பு. அன்னார் முத்திரையைக் கவனி. இவ்விளைஞனை அழைத்து வரும்படி எனக்குக் கட்டளை. அரசசேவைக்கு அவன் விரும்பப்படுகிறான்." என்று கூறினன்.

இம்மொழியைச் செவிமடுத்ததும் மாவரைப்போன் மனம் கலங்கியது. வெருவிய தோற்றத்துடன், "பெருந்தகையே! இவ்வாலிபன் என்சொந்த குமாரனல்ல என்பது உண்மையே. ஆயினும் நான் இறக்கும் வரையில் அவன் இங்கிருந்து, என் பொருள் யாவற்றிற்கும் உரியவனாதல் எனது பேரார்வம். ஆனல் அரசன் ஆணை கடத்தல் முடியாதெனின் அவ்வாறே யாகட்டும்" என்று விடைபகர்ந்தான்.

ஆனல், இளைஞனின் எண்ணமோ எதிராயது. கண்டகனவெல்லாம் காரிய வழிப்பட்டனவேயென்று எண்ண எண்ண, நினைவும் சற்று ஐயுற்றது. மாவரைப்போன்கூறிய மொழிகளுக்கு பேரூழியக்காரன் சற்று புன்னகையுடன் "நற்குடியிற் பிறந்த இச்சிறுவனுக்கு உன் யூகம் வேண்டாத் தொழில் இயையுமோ? சிறுனே! நீ அறைக! இவ்விரண்டில் எது?—இங்குறைவதா? என்னுடன் அரண்மனை புகுவதா?" என்றான்.

இதைக் கொண்ட இளைஞன், முகத்தகத்தே சிறு கூச்சம் தோன்ற "இத்தல வாழ்க்கை இனியதே. ஆண்டனைத்தும் அன்பு சுரப்பதே. காடுகாப்போனுகிய ஞானம் முதிர்ச்சிபெற்ற என் வில்வித்தையினுல் வில்வல்லோர் பந்தயத்தில் பணப்பையொன்றைப் பரிசாகப் பெறல் கூடும்" என்கிறான். அன்றியும் "சிற்சிறு மீன்கள் சிறக்க விளையாடும் இதைப்போன்ற நீரோடை வேறெங்குமிலது. ஐயனே! அதுமட்டுமல்ல. கான்கோழிகள் கொக்கரிக்கின்றன. நீர்ப்பெடைகள் நாணலிடை நீந்தி நடிக்கின்றன. தூரத்தே ஆற்றங்கரை மைதானத்தில் மழைப்புள்ளின் அழைப்பு ஆனந்தத்தைப் பெருக்குகின்றது." என்று வியந்தான்.

இவ்வாறு புகழ்ந்து பேசியவுடன், பேரூழியக்காரன்

"இளைஞனே! நன்று! நன்று! ஆனால் நீ வரும் இடம் இதைவிட மேன்மையுடைத்து." என்று கூறி மாவரைப் போனை நோக்கி "இம்மாண்புடைச் சிறுவனை வளர்த்தற்குத் தக்க பேறடைவாய். அரசன் ஆணைப்படி இதோ உனக்கு ஒரு பொற்குவியல். இதைக்கொண்டு நீயும் நின் வேலைக்காரர்களும் நெடுங்காலம் இளைப்பைத் தீர்த்துக் கொள்ளலாம்" என்றான்.

மாவரைப்போன், பாலனுக்கு ஆசிமொழிகூறி போய் வா விடைதந்தான். ஆனால் அவ்வமயம் அவன் அன்னை இல்லம்விட்டு வெளிவந்து "என் களிப்பே! நீ பிரிய நேர்ந்துழி என் மனம் கவல்கின்றது! எழிற்சேயே! ஆசீர்வதிக்கின்றேன். வீரனாகவோ, பிரபுவாகவோ இருக்கும் பிற்றைக் காலத்து இக்குடிசையை மறவேல்" என்று கூறி மார்போடு அணைத்துக்கொண்டாள். "போதும்! போதும்! நாள் கழிகின்றது. இச்செல்வனைப் பாராமல் இறைவன் உன்னான்" என்று மொழிந்து இடம்விட்டு நகர்ந்தான். பகைவேல், தன்னை இதுவரையில் பரிவுடன் வளர்த்தெடுத்த தாய் தந்தையரைப் பிரிய நேர்ந்துழி ஒரு சார் துன்பு கொளினும் மற்றொருசார் மேலோன் ஆகலாம் என்று எண்ணிய எண்ணங்களெல்லாம் செயலாக மாறி சிறப்புறுதலும் கூடும் என்னும் நம்பிக்கை மிகுதியினால் சமயவேலைப் பின்தொடர்ந்தான். மரப்பாலத்தின் வழியாக ஓடையைத் தாண்டிக் குதிரை மீதூர்ந்தான். பகைவேல் அவன் பின் அமர்ந்தான். பிறகு இருவரும் புறப்பட்டுப்போயினர்.

கடைசியில் அரண்மனைக்குச் செல்லும் சாலையை அடைந்தனர். ஆனால் சமயவேல் அவ்வழியே செல்லாமல்,

அதைவிட்டு விலகி ஓடையை மறுமுறை கடந்து காடுடு புக்கினன். உடனே பகைவேல் "அரசன் தற்போது இக் கானிடத்தே உளனோ!" என்று கேட்டான். "அறிவிலாச் சிறுவனே! தான் நினைத்த இடந்தோறும் உறைவது அரசனுக்கு இயல்பு. தற்போது ஆரண்யத்திற்கு அப்பாலுள்ள மடத்தில் வசிக்கின்றான் போலும்" என்று கடுகடுப்புடன் புகன்று, கொலைத்தொழில் புரியக் கட்டளையிட்ட காவலனைத் தனக்குள் கடிந்து, புரவியைக் கடுக நடத்தினன். சிறிதுநேரத்திற்கெல்லாம் ஒரு புல் படர் மேட்டு நிலத்தை யடைந்து அடவிக்குள் ஆழ்ந்து விட்டான்.

இருவரும் தருக்கள் நெருங்கி ஓங்கிய காட்டைக் கடந்து ஒரு கப்பிக்குன்றின் உச்சியை நாடினர். சதுப்பு நிலப்பள்ளத்தாக்கு ஒன்று அதன் அடியைச் சூழ்ந்து நின்றது.

பூமி சிறிது சிறிதாக மேல்நோக்கிச்சென்று கொண்டிருந்த மற்றொரு பக்கத்தில், இருகங்கும் வானுயர் மரங்கள் செறிந்துள்ள பசிய சமவெளியொன்று நெடு வழி காட்டி இலங்கிற்று. பகலவனும் தன் பகல் துயர் ஆற்ற எண்ணினன். தான் கொண்ட கொடுந்தொழிலை இயற்றிய பின்னர், நள்ளிரவில் அந்நடுக்காட்டில் தங்கியிருப்பது இயலாதென்றெண்ணி கொண்டதீத்தொழிலை முடிக்க இதுவே தக்க சமயம் எனத் தேர்ந்தான்.

"இளையோனே! குதிரையை விட்டு இழி! இன்றேல் இச்சேற்றில் நாம்யாவரும் புதைந்து விடுவோம். விரைக! விரைக! இன்றேல் காரிருள் காலன், கானிடைப் படுத்திவிடுவான்" என்று நயவஞ்சக மொழிபகர்ந்தான். ஆனல் வாலிப

னே இதையுணரான். ஆகவே சொன்னவாறு இசைந்தான். இருவரும் குன்றின் உச்சியை நீக்கி கீழுள்ள பள்ளத்தாக்கை நோக்கிச் சென்றனர்.

ஒரு சிறிதும் அரசசேவகனின் எண்ணத்தை யறியாத இளைஞன் இசையுடன் சில்லரைப் பாட்டுக்கள் சிலபாடிக் கொண்டே வழிபோந்தனன். அடிவாரத்தை யடைந்ததும் சமயவேல் குதிரையை நிறுத்தி, பகைவேலைக் குதிரையின் கல்லணையின் கச்சையை இறுகக் கட்டும்படி கட்டளையிட்டான். சிறுவன், கட்டளையை சென்னிமேற் கொண்டு செய்ய முன் வந்தான். இம்மொழியைச் சொல்லுகையிலேயே அவனது, இயற்கையாகவே கொடுங்குரலாயுள்ளது மிகக் கொடுங்குரலாயிற்று. கொடுங்கையும் கூரிய ஈட்டியின் பிடியைக் கொண்டது.

பையனே இசைநிறுத்தி ஏவல்புரிந்து நின்றான். ஈட்டியை இழுத்து, இணையிலாச் சிறுவன் உடலில் ஆழ்த்தினான். பெருங்குரலிட்டு பையன் பின் சாய்ந்தான். நடை தடுமாறிற்று. சிறிது நேரத்தில் புவியின் மீது அசைவற்று விழுந்துவிட்டான். கொலையாளி குதிரையினின்று இழிந்து மடிந்தது மெய்யோ பொய்யோ என்று கவனித்துப் பார்த்தான். உறுப்புகள் உயிரின்றி இருந்தனவே யெனினும் சுவாசம் நீங்கியதில்லை. ஆகவே மறுமுறை ஈட்டியைக் கொண்டான். திடீரென அப்போது மணியோசை யொன்று காதிற்பட்டது. பையனின் காப்புத் தெய்வமோ, அது தன்னைக் கொல்ல வருகின்றதோ என்று, மனம் அரண்டு ஏக்கமுற்றது. ஆகவே குதிரைமீது பாய்ந்து ஓட்டம் பிடித்தான்.

மறுபடியும் மணியோசை! அறிவு அழிந்தது. திகில்

உள்ளத்தைக் குலேத்தது. குதிரையின் குடலைக் குத்தினன். புவனஞ்சுற்றப் புளிபறந்தது. ஐயோ! தூர்க்காலம், ஓடையின் பாலத்தைத் தாண்டுவதற்கு முன் விலங்கு வீறிட்டுக் கீழ் விழுந்து உயிர் துறந்தது. இரவெல்லாம் எண்ணி யெண்ணி அடிவைத்தான். அரண்மனை வாயிலை விடியற் காலை யடைந்ததும், களைப்பினுலும், இழைத்த தீத்தொழில் மனத்தகத்தே கனல் கொளுத்த தம்புலன்கள் பொறிகலங் கியமையாலும், ஆருயிர் இழப்பவன் போல் காணப்பட்டான்.

சற்று நேரத்திற் கெல்லாம் அரண்மனை வாயில் திறக்கப்பட்டது. வேந்தனறை புகுந்தனன். நடந்தவற்றைச் சொல்ல நொந்தானே யாயினும், காரியம் முடிந்த வரலாற்றைக் கக்கினுன். "அரசே! பையன் இறந்ததைப் பற்றி ஐயுறேல். ஆதலால் முதியோர் மொழிந்தது முளையாது. கானிடை யெழுந்த மணியொலி, பையனைப் பேருலகஞ் செலுத்த எழுந்தது போலும்" என்று முடித்தான்.

அரசன், உடனே "சலிக்காத தைரியமும் திடமனதும் பெற்ற போர் வீரன் ஒருவனை அனுப்பினதாக எண்ணினேன். ஆனல் இப்போது ஒரு பேடியைப்போல் காண்கின்றய். உடலோ ஊசலாடுகின்றது. நினைவு நின்னைவிட்டு அகல்கின்றது. என் விருப்பத்தை நிறை வேற்றியதற்கும் உன்னிடத்தே யாதொரு குறியும் காணேன்." என்று கவலையுடன் வாய்விட்டான்.

ஆயினும் அற்றை நாள் முழுவதும் அச்செய்தியைப் பற்றி யோசித்து யோசித்து, பாலன் இறந்தொழிந்ததை எழுத்திலிட்டான். ஆகவே, தன் குலத்துக் கோடரி யொழிந்ததென்றும், தன்குலத்திற்கு இறுதி இனி இடைப்பெய் யாதென்றும் எற்பட, உளம் மகிழ் வெய்தது.

மகிழ்ச்சி யுண்டாகவே சமயவேலுக்கு தக்க பெருங் கொடைகள் பயந்தான். ஆனல் அவைகளை யனுபவிக்கப் போதுமான ஆயுள் இல்லை. மாரிக்கு முன்னே இந்நில வுலகை நீத்து, தொல்லுலகை எய்தினன். (தொடரும்.)

M. சோமசுந்தரம் பிள்ளை, பி.ஏ., எல்.டி.,

கலியாண ஏற்பாடுகள் செய்யவேண்டியதும் நாட் குறிப்பிட வேண்டியதும்."

தனபாலசெட்டி :—"என்னல் ஆகவேண்டியது எதாயிருந்தாலும் தடையின்றிச் செய்யக் காத்துக் கொண்டிருக்கிறேன். ஆனல், தாங்கள் சொல்லு வதைப்பார்த்தால் ஆச்சரியமாகவிருக்கிறது. என் முடி விற்குப் பின்னர்தான் நாட் குறிப்பிடவேண்டுமென் ருல் வேடிக்கையாகத் தெரிகிறது."

வித்தியாசாகரர் :—" இதில் ஆச்சரியமொன்று மில்லை, தங்களால்தான் முடிவுக்கு வரவேண்டியதா யிருக்கிறது. நமது இளவரசரின் உயிர்கூடத் தங்கள் கையிலிருக்கிறது."

தனபாலசெட்டி:—தாங்கள் சொல்லுவதெனக்கு அர்த்தமாகவில்லையே. தயவு செய்து கொஞ்சம் வெளிப்படையாகச் சொல்லவேண்டும்."

வித்தியாசாகரர்:—" தாங்கள் வெளிப்படையாக சொல்லச் சொல்லுவதைப் பார்த்தால் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை யென்றே நினைக்கிறேன். தாங் களின்னும் தெரிந்துகொள்ளாதவரை நான் வெளிப் படையாகச் சொல்லித் தீரவேண்டியதே."

விகடன் :—"ஆம் ; யதார்த்தம். 'அள்ளாது குறையாது சொல்லாது பிறவாது' என்றவாறு சொல் லித்தான் தெரியவேண்டும். மெள்ளச் சொல்லுங்கள். நானும் கேட்கிறேன்."

வித்தியாசாகரர்:—ஆகவே தாங்கள் பெரிய மனது செய்யவேண்டியது. என்னவென்ருல், இள வரசர், தங்கள் புத்திரியின் மேல் காதல்கொண்டிருக்

கிறதனால், அக்கன்னிகா ரத்தினத்தை நமதுஇளவரச ருக்கு கன்னிகாதானஞ்செய்து கொடுக்கவேண்டும்."

விகடன்:—"பேஷ்! அச்சா! வெரிகுட்! அப்படியா சமாசாரம்? ஷோக். நான், வேறு ஏதோ அரிசிக் கணக்கென்றல்லவா எண்ணினேன். சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்தது. பழம் நழுவிப் பாலில் விழுந்தது. மகா-ா-ா-ஸ்ரீ செட்டியாரவர்களின் பாக்கியமே பாக்கியம். யாருக்குக் கிடைக்கும் இந்த சிலாக்கியம். செட்டியாரவர்களின் தருமகுணத்திற்கு, இராஜாதிராஜ, பராக்கிரமசிங்க-குலசேகரப் பாண்டியரவர்களே தானம் வாங்க வந்து விட்டார்கள். 'இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்.' கொடுப்பவன்கை எப்பொழுதும் மேல்தான். என்னதான் அரசாயிருந்தாலும், என்போன்ற ஏழைகளை மூட்டி தூக்கும் பிராமணரென்று சொன்னாலும், அரசரும் முப்பத்திரண்டு தானங்களில் ஒன்ருகிய கன்னிகாதானம் பெற வந்துவிட்டார்கள். தானங்கள் கொடுப்போரின் மகிமையே மகிமை. முழு மனிதனுக்கு முப்பத்திரண்டு பல். பிராமணன் முப்பத்திரண்டு பற்களைக் காட்டி முப்பத்திரண்டு தானம் வாங்கினுல், மஹாராசாக்கள் ஒரு பல்லைக் காட்டி ஒரு தானம் வாங்குவார்கள் போலும்."

தனபால செட்டி:–"தாங்கள், வேடிக்கையாகவே இதைச் சொன்னீர்களென்று நினைக்கிறேன். ஏனென்ருல் இப்படிப்பட்ட வழக்கம் நமக்குள் கிடையாது."

விகடன்:—"வேடிக்கையா? அந்த வாடிக்கை இந்த மந்திரிக்குக் கிடையாதே! மன்–திரி. மன்=

இராஜா ; திரி=திரிபோல், மந்திரி—இராஜவிற்கு, வெளிச்சங் கொடுக்கும் திரிபோலிருப்பவர். இராஜா விளக்குபோல். மந்திரி விளக்குமாறுபோல். விளக்கிற்கு சுய வொளியில்லாவிட்டாலும், அதை விளக்குமாறு, அதாவது—அதை தெளிவு படுத்தும்படி 'திரி' ஏற் படுகிறது. ஆக, இதன்பொருள், இராஜா விளக்கா யிருந்தாலும் ஒளி கொடுக்காமலிருக்கிறார். அதாவது, இராஜா ஒன்றையும் வெளிப்படையாக பேசமாட் டார். அதை விளக்குமாறு மந்திரி ஏற்படுகிறார். அப் படிப்பட்ட மந்திரி சொல்லைப் பொய்யென்று எண்ண லாமா? நான், அதாவது, அதாவது என்று அடிக் கடி சொல்லிக்கொண் டிருக்கிறேனல்லவா ? அதன் பொருள், அதாவது—அது=மந்திரி ஐயா அவர்கள் கேட்பது ; ஆவது=ஆகக்கடவது. தாங்கள் தக்க சீர் சிறப்புடன் நமது பட்டத்திற்கு வரப்போகும் அர சரை சீக்கிரமாகத் தானமேற்கும்படி செய்துவிட வேண்டும். அதாவது."

வித்தியாசாகரர் :—"விகடரே! செட்டியாரவர் களைப் பேச விடாதபடி நீரே பேசிக்கொண்டிருந் தால் செட்டியாரவர்கள் கருத்தைச் சொல்லுவதெப் படி ?"

விகடன்.—"அதாவது என்று தான் மந்திரி ஐயா அவர்களுக்கு நான் பேசினல் கோபந்தான் வரு கிறது. மூக்கில்தான் இருக்குமோ என்னமோ! செட்டியாரவாள் நீங்கள் தானே பேசுங்கள். அதா வது என்று சொல்லுங்களேன். அதாவது செட்டியா

ரவர்களுக்காக நான் சொல்லுகிறேன். அதாவது—அதாவது.''

தனபால செட்டி:—''நானென்ன சொல்லவிருக்கிறது. இத்தகைய வழக்கமில்லையே. எத்தனையோ இராஜ ராஜேஸ்வரர் நம் இளவரசரை மருமானாய் * விரும்பி யிருப்பார்கள். மேலும், க்ஷத்திரிய பழக்க வழக்க, நடையுடை பாவனைகள் வேறு. வைசிய குலப் பழக்க வழக்கங்கள் வேறு. யானைக்கும் எலிக்குமுள்ள வித்தியாசமிருக்கிறது. இது பொருத்தமானதாகக் காணவில்லை.''

விகடன் :—''செட்டியாரவாள்! நான் அதாவது, அதாவது என்று சொல்லச் சொன்னால், தாங்கள் அதாவது † எனச் சொல்லிக்கொண் டிருக்கின்றீர்களே. தாங்கள் சொல்வது, கடுகுப் பிரமாணப் பொருத்தங்கூட உள்ளதாக இல்லையே, ஓரிடத்தில் பழக்க வழக்கமென்றீர்கள். பழக்கம், தானே வழக்கத்திற்கு வந்துவிடுகிறது. இதிலென்ன பிரமாதம்? உலகத்தோர், கலியாண மென்றால், கன்னிகாதானமென்றறியாமலிருக்கிறார்கள். கன்னிகாதானமென்பது, முப்பத்திரண்டு தானங்களி லொன்றாகிறது. அதற்காகவே அநேக திரவியங்களுடன் கன்னிகைகளைத் தானம் செய்கிறார்கள். சில ஜாதியார்களுக்குள், தக்க பணம் கொடுப்பவர்களுக்கே பெண் கொடுக்கும் வழக்க மிருக்கின்றது. இது கன்னிகா தானமாகாது. விலை கொடுத்துப் பெறுவதால் அக்

---

* மருமான்=மருமகன். † அதாவது என்பது, அதாகாது என்பதின் பரிபாஷை.

கன்னிகையை விலைமாதராகவே கொள்ளவேண்டும். விலைமாதின் மாமாவிற்கும் இப்பொழுது சொல்லிய பெண்ணின் தகப்பனாகிய மாமாவிற்கும் யாதொரு வித்தியாசமுங் கிடையாது. இருவரையும் சரியான கும்பகோணத்து மாமாவாகவே எண்ண வேண்டும். விலைமாதிற்கு மாமாவின் உதவியுடன், நேரிற் பணங் கொடுத்துப் பெறுவார்கள். பெண்ணிற்காகப் பணம் கொடுத்து கலியாணம் செய்பவர்களோ பெண்ணின் தகப்பனுக்குக் கொடுத்துப் பெறுகிறார்கள். ஆகவே, அதற்கும் இதற்கும் வித்தியாசமில்லை. ஏற்றோர்க்கு இல்லை யென்னாத தாங்கள், இந்தத் தானத்தையும் கொடுக்க, 'இல்லை' யென்று சொல்லக் கூடாது. விரும்பியதுவும் இந்த ஒரு தானந்தானே."

வித்தியாசாகரர் :—"விகடர் சொல்லுவதிலும் அநேக உண்மைகளிருக்கின்றன."

விகடன் :—"நான் சும்மா சொல்லுவேனா? உகும்!"

வித்தியாசாகரர் :—"அரசர்களுக்கு நால்வகை உபாயங்க ளிருக்கின்றனவல்லவா?"

விகடன் :—"ஆம்: ஒன்னு, ரண்டு, மூனு, நாலு. மூனுக்கப்பரந்தான் நாலு. அஞ்சிக்கு ஒன்னு போனா நாலு. ஆறுக்கு ரண்டு போனா நாலு. பத்துக்கு ஆறு போனா நாலு. எல்லாம் நாலுதான் ஆன்ஸர் * வருகிறது. அஞ்சு என்பது பத்தில் பாதி. எஸ் † தான் ரைட் ‡."

---

* ஆன்ஸர்=விடை, உத்தரவு. † எஸ்=ஆம். ‡ ரைட்=சரி.

வித்தியாசாகரர் :—“ நிறுத்துமையா. அவை சாம, தான, பேத, தண்டம் என்பன. சாமமாவது சமாதானமாக முடித்தல்; தானமாவது, பொருள் கொடுத்து முடித்தல்; பேதமாவது, ஒருவரிட மிருந்து ஒருவரைப் பிரித்து முடித்தல்; தண்டமாவது, படைமுதலியவற்றை உபயோகித்துக் காரியத்தை முடித்தல். இவற்றில் எதைக்கொண்டாவது காரியத்தை முடித்துக்கொள்ளவேண்டும். பெண்ணை ஆற்றில் குளத்தில் தள்ளவா சொல்லுகிறோம்? தாங்கள் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இளவரசர், வேறுபெண்ணை மணம் புரிவதான உத்தேசத்தி லில்லை. அப்படியிருந்தால் யார் தங்களை கட்டாயமென்று கேட்கப்போகிறார்கள்? தாங்கள் சந்தோஷமாய்ச் செய்துகொடுங்கள். முதலில் தங்கள் புத்திரி தான் பட்ட மகிஷியாவாள். இளவரசர், ஒருகால் வேறு கலியாணம் செய்துகொண்டாலும், தங்கள் புத்திரி பட்டமகிஷி என்பதையும், பட்டமகிஷியின் குழந்தைக்கே வாரீஸ் பட்டமுண்டென்பதையும் ஒருவராலும் மாற்றமுடியாது. எப்பொழுது இளவரசர் தங்கள் புத்திரிமேற் காதல்கொண்டாரோ, அப்பொழுதே மற்றொரு ஸ்திரீயை மணம் புரியாரென்பது உண்மை. அரசர்கள் பலதாரமுடையவர்களாயிருப்பதற்குக் காரணம், தாய் தந்தையர், தக்க அந்தஸ்துள்ளவர்களிடத்தில் பெண் எடுக்க வற்புறுத்துகிறார்கள். வரனுக்கு இஷ்டமில்லாவிட்டாலும் கவனிப்பதில்லை. தாய் தந்தையருக்காக மணம் புரிந்துகொண்டார்களானாலும், மணந்த பெண்ணின்மேல்

பற்றற்றவர்களாகி பின்தங்களுக்கிஷ்டமான பெண்ணை விவாகம் செய்து கொள்கிறார்கள். ஆனால் இது அப்படியல்ல. உண்மைக் காதல் உயிருள்ளளவு மாறாது. தங்களுக்கு பிரபுப்பட்டமொன்றும் கொடுக்க இராஜாங்கத்தார் யோசித்திருக்கிறார்கள். கலியாணபுரம் சிற்றரசர் விஸ்வநாதசெட்டியார், வாரீஸில்லாமலிறந்துபோய் விட்டதால் தாங்களே அதை வகிக்கத் தகுந்தவர்களென்று தங்களை அவ்விராஜ்ஜியத்திற்கு பட்டம் சூட்டுவிக்கவும் சில ஏற்பாடுகள் நடக்கின்றன. ஆகையினால் தங்களை ஒரு சிற்றரசரென்றே சொல்ல வேண்டும். சிற்றரசர்களுக்குப் பெண், வேறு சிற்றரசர்களிடத்தில் அல்லது தம் பந்துக்களிடத்தில் எடுக்க வேண்டியது கிரமமாகும். ஆனால் பெண் கொடுப்பதோ, தம்போன்ற சிற்றரசர்களுக்கும், பெரிய அரசர்களுக்கும் கொடுக்கலாமே தவிர, அரசர்களாயில்லாதவருக்குக் கொடுக்கக்கூடாது. அந்த நியாயத்தில் தாங்கள், இளவரசருக்குப் பெண்கொடுக்கப் பாத்தியமுண்டு. மேலும் கலியாணத்திற்கு வேண்டிய ஜவளித்தினுசுகளும் தங்களிடத்திலேயே கொள்ள உத்தேசிக்கிறோம். ஒவ்வொரு தேசத்தரசருக்கும் மணவோலை யனுப்பும்போது உயர்ந்த பட்டுச்சால்வையொன்றும், உயர்ந்த நவரத்ன ஆபரணமொன்றும் வைத்தழைப்பது அரசர் வழக்கம். ஜவளிகள் திருப்தியாயிருந்தால் மற்ற தேசத்தரசர்களும் தங்களிடமே வருஷக்கணக்காக ஒப்பந்தம் செய்து கொள்ளுவார்கள். இளவரசர் தங்கள் புத்திரியின்மேலுள்ள காதலால் இருக்கும் நிலைமையைத் தாங்கள் பார்த்தால்,

அவர் காதல் கொண்டது வேறொருவர் புத்திரியாயிருந்தால் தாங்களே இந்த விவாகத்தைச் செய்து முடிப்பதற்கு முக்கிய கர்த்தாவா யேற்படுவீர்கள்."

தனபாலசெட்டி:—"இளவரசர் அப்படிப் பட்ட நிலைமையி லிருக்கும்பொழுது மாட்டேனென்பதுவும் சரியல்ல. மேலும், மஹாராஜாவிற்கும் நம்மேல் மன வருத்தமுண்டாகும். மூன்றாவது, நான்கு பேர் கூடிச் செய்வதை ஒருவன் செய்ய விடாமல் தடைப்படுத்தினால் பெரும் நாகத்திற்கு ஆளாவானென்று தர்ம சாஸ்திரம் கூறுகிறது. மேலும், விகடர் சொன்னபடி இதோ ஒரு தானத்தைச் சேர்ந்ததாயு மிருக்கிறது. மஹாராஜா அவர்களிஷ்டம்போல் சம்மதித்து விட்டதாகச் சொல்லுங்கள்."

விகடன் :—"அதுதான் சரி. செட்டியாரவர்களின் தர்மம் வீண்போகுமா? பிறர் கஷ்டப்பட செட்டியாரவர்களின் மனந்தான் பொறுக்குமா? அப்படித்தான் எதையும் ஆற அமர யோசித்தே தீர்மானிக்கவேண்டும். நானிதுவரையும் செட்டியாரவர்களுக்குத் தக்க சொத்திருக்கிறது; தயாள குணோத்தமர் என்று மட்டும் நினைத்தேன். இன்றுதான் செட்டியாரவர்களுக்கு இராஜரீகமான யோசனைகளும் பலமாயிருக்கிறதென்று கண்டேன். அவ்வளவு இல்லாமலா சிற்றரசுப்பட்டம் கிடைக்கப்போகிறது? எல்லாம் ஒருவருடன் நன்றாய்ப் பழகப் பழகத்தான் தெரியும்."

வித்தியாசாகரர் :—"எங்களுக்கு, இப்பொழுது வந்த காரியத்தை நிறைவேற்றி வைத்ததற்காக, மெத்

தவும் சந்தோஷ முண்டாகிறது. தங்களுக்கு வந்தனம். ஒன்று சொல்லமறந்து விட்டேனே. இளவரசரின் ஜாதகப்படி, அவர் கலியாணம் செய்துகொள்ளும் பெண்ணின் தந்தைக்கு ஆண்சந்ததி உண்டென்று சமஸ்தான ஜோஸ்யர் அவர்கள் சொல்லுகிறார்கள். ஆகையினால் தாங்கள் செய்வதைச் சந்தோஷமாகச் செய்யுங்கள். கடவுள் கிருபை செய்வார்; நாங்கள் போய்வருகிறோம்."

தனபாலசெட்டி :—" எல்லாம் பெரியோரின் ஆசீர்வாதம். நல்லது, போய் வாருங்கள்."

வித்தியாசாகரரும் விகடனும் அரண்மனையை நோக்கிச் சென்றார்கள். செட்டியார் தன் வீட்டிற்குள் சென்று தன் மனைவியிடம் நடந்த யாவையும் நவின்றார். சிவகாமி அம்மாள், இந்த விவாகம் தனக்கு விவாதமாகத் தோன்றுவதாகச் சொன்னாள்.

தனபாலசெட்டி :—" சிவகாமி! நான் அவர்களிஷ்டப்படியே சம்மதித்து விட்டேன். அப்படிச் செய்யாமலுமிருக்க முடியாது. அவர்களோ நம்மைக் கெஞ்சிக் கேட்கிறார்கள். நாம் முடியாதென்று சொன்னாலும், கட்டாயம் கலியாணத்தை முடித்து விடுவார்களென்றே தெரிகிறது. இளவரசர் நம் குழந்தைமேல் அதிகக் காதல் கொண்டிருக்கிறாராம். அதனால் மிக்க அபாயஸ்திதியி லிருப்பதாகக் கூடச் சொல்லுகிறார்கள். கலியாணத்தை நடத்த வேண்டுமென்றால், நம்மைச் சிறையிலடைத்து நடத்தமுடியாதா? பலவந்தமாய் நடத்தினாலும் நம்மால் என்னதான் செய்ய முடியும்? அல்லது நமதுகுழந்தை

யைச் சிறையிலடைத்து நம்மிடம் சம்மதமென்ன வென்று கேட்டால், நம் அருமைக் குழந்தை அடை பட்டிருக்க மனந்தாழாமல், சரியென்று தானே சொல்லுவோம். இந்தக் கலியாணம் நடந்தால் நமக்கொரு ஆண் குழந்தை பிறக்குமென்று இளவரசர் ஜாதகத்திலிருக்கிறதாம். நமக்கு பிரபுப் பட்டமொன்று இப்பொழுது கிடைக்கப் போவதோடு, கலியாணபுர இராஜ்ஜியத்தை நமக்கு முடிசூட்டுவிப்பதாகச் சொல்லுகிறார்கள். கலியாணபுரம் நம் ராஜாவின் ஆளுகையின் கீழுள்ள ஒரு சிற்றரசு நாடு. முன், நம் இராஜாங்கத்தார் அந்த இராஜாங்கத்தை முற்றுகை போட்டபொழுது நம்மிராஜாங்கத்தாருக்கு அதிக உதவி செய்த விஸ்வநாத செட்டியாருக்கு அவ்விராஜ்ஜியம் முடிசூட்டப் பட்டது. இதுதான் முதல் வைசியர் அரசாக்ஷி புரிந்ததாகும். ஆனால், விஸ்வநாத செட்டியார் வாரிசு இல்லாமலே காலஞ் சென்றுவிட்டார். அதற்குத்தானென்னை சிற்றரசனாக முடி சூட்டுவதாகச் சொல்லுகிறார்கள். நமது குழந்தை பட்டமகிஷியாயும், கடவுள் கிருபையினால் நமக்கொரு ஆண் பிள்ளை பிறந்தால் அது ஒரு சிற்றரசனாயும், ஆவதானால் நன்றாயிருக்கவில்லையா? நமது இளவரசரின் அழகைக் கண்ட இந்திராணியும் காமுறுவள். நம் குழந்தைக்குப் பிறப்பாலன்றி மற்றெதிலும் அவரே சரியான மாப்பிள்ளை. இளவரசருக்கு நம் குழந்தையின்மேல் அசாத்தியப் பிரியமாம். அதனால் மற்ற அரசர்களைப் போல் வேறு கலியாணஞ் செய்துகொள்ள மாட்டாரென்று திடமாகச் சொல்லுகிறார்கள். நானும் எவ்வ

ளவோ தர்க்கங்களெல்லாம் செய்து கடைசியில் இவை என் மனதிற் பட்டுத்தான் சம்மதித்தேன். ஆனால் குழந்தையின் இஷ்டமென்னவோ அதைத் தெரிய வேண்டும். அவளுக்கு இஷ்டமில்லா விட்டாலும் ஒன்றுஞ் செய்ய முடியாது. நானொரு பைத்தியக்காரன். அவளுக்கு இஷ்டமானால்தான் முடியுமென்று சொல்லி விட்டேனில்லை. குழந்தை தனக்கு, இஷ்டமில்லையென்று சொன்னாலும் கட்டாயப்படுத்தவே போகிறார்கள். அவள் தனக்கு இஷ்டமென்று சொன்னாலும், இராணி யாயிருக்க ஆசைப்பட்டுச் சம்மதித்தாளென்று ஊரி லுள்ளோர் சொல்லிக் கொள்வார்கள். என்றாலும், நீ வள்ளிநாயகியின் தோழிகளிலொருத்தியை யனுப்பி அவளிஷ்டமென்ன வென்றறி.''

சிவகாமி அம்மாள்:—“ அவளுக்கு இஷ்டமில்லா விட்டால் இதனாலென்ன கஷ்ட நஷ்டங்கள் வந்த போதிலும், இந்தக் கலியாணம் நடக்கவே கூடாது.''

தனபால செட்டி:—“சிவகாமி! நீ சொன்னது சரியே எனினும், நீ அவ்வளவு பிடிவாதமாயிருக்கக் கூடாது. ஏனென்றால் நாடெல்லாம், பிறஜாதியில் கலி யாணம் செய்யலாமென்ற சட்டம் பிறப்பிக்க வேண்டு மென்று கிளர்ச்சி செய்கிறார்கள். அப்படிப்பட்ட சம யத்தில், இச்சங்கதி வெளிவந்தால், முதலாவதாக இள வாசருக்கே அப்படிப்பட்ட விவாகம்செய்து வைக்க வேண்டுமென்று பெருங்கிளர்ச்சி யுண்டாகிவிடும். மற் றும் ஜனங்களும் நமக்கு விரோதமாவார்கள். ஆகையி னால் நீ பல காரியங்களையும் தீர்க்காலோசனை செய்ய

வேண்டும். நாமெல்லாம் இராஜவிசுவாசமுள்ள குடிக
ளல்லவா ?"

சிவகாமி அம்மாள், வள்ளிநாயகியின் தோழி
களில் ஒருத்தியை அழைத்து, அவளிடத்தில் யாவற்
றையுஞ்சொல்லி, வள்ளிநாயகியின் இஷ்டத்தை
அறிந்துவரும்படி அனுப்பினாள். வள்ளிநாயகியோ,
தன் தாய் தந்தையரின் இஷ்டப்படியே செய்யலா
மென்று சொல்லிவிட்டாள். முதலாவது அவள்,
தன்னை இராஜகுமாரன் கலியாணம் செய்து, வேறு
யாராலாவது தன் கற்பிற்கு பங்கம் வரும்படி செய்து
விடுவாரோ எனப்பயப்பட்டாள். பின், ஒரு இராஜ
குடும்பத்தில் பிறந்தவர் அப்படிச்செய்யமாட்டாரென்
றும், அப்படிச்செய்தால் அது அவருக்கே இழிவை
உண்டுபண்ணுமென்று தெரிந்துகொள்ள மாட்டாரா
வென்றும் எண்ணினாள். ஆனால், தான் வேறுயாரையா
யினும் மணந்துகொண்டால், இளவரசர் கட்டாயம்
தன் கற்பை அழிக்க ஏற்பாடு செய்வாரென்றும்,
அதைவிட அவரையே மணந்துகொண்டால் அப்படி
யொன்றும் ஏற்பட வழியில்லையென்றும் கருதினாள்.
வள்ளிநாயகி, இளவரசர் தனக்குச் செய்த உதவியி
னால் அவரை ஒரு குலதெய்வமென்று நினைத்தாள்.
அவர் உருவத்தை மனதிலெண்ணி அதனிடம் தன்
குற்றங்களை மன்னிக்கும்படி கேட்டுக்கொள்வாள்.
அவளுக்கு அந்தரங்கத்தில், இளவரசனைப் போல்
அழகும் திடமுமுள்ள புருஷன் தனக்குக் கிடைக்க
வேண்டுமென்று கருத்தேற்பட்டிருந்ததேயன்றி, இள
சன் தனக்கு மணவாளனாய் ஏற்படுவானென்று கரு

தவேயில்லை. கடவுள் கிருபையால் கலியாணமாகிச் சுகமாயிருக்கட்டும்.

நமது செட்டியார் இளவரசருக்குப் பெண் கொடுக்கச் சம்மதித்தது, பொருளாசையினாலாவது பயத்தினாலாவதென்று நம்வாசகர்கள் நினைத்துக் கொள்ளக் கூடாது. குடிகளுக்கும் அரசனுக்கு மிடையில் அவ்வளவு வாஞ்சை உண்மையாகவே இருந்து வந்தது. அவ்விராஜ்ஜியத்திலுள்ள ஜனங்கள், அரசன் எண்ணத்தை நிறைவேற்ற விரும்பிய குடிகள். தங்கள் அரசனைத் தெய்வமென் றெண்ணுபவர்கள். கொற்றவனும்* குடிகள்மனங்கோணுது நடப்பவன். அதனுலேயே செட்டியார் சம்மதித்தார். அந்த எண்ணங்கொண்டவராயின் ஏன் அவ்வளவு தூரம் வாதாடியிருக்கவேண்டுமெனின், ஊர்வாய்க்குப் பயந்துதான் என்னதான் குடிகளுக்கும் அரசனுக்குமிடையில் வாஞ்சையிருந்தாலும், தூற்றித் திரியும் அற்பர்கள் இரண்டொருவராவது இருக்கமாட்டார்களா? தற்காலத்தில் ஒரு பெரியவர் சொன்னுராம், நம் இந்தியாவின்மீது வேற்றரசன் படையெடுத்துவந்தால், அந்த வேற்றரசனுக்கு ஜயம் கிடைக்கவேண்டுமென்று விரும்பவும் மாட்டாராம். ஆனுல் நம் காருண்ய பிரிட்டிஷ் இராஜாங்கத்திற்கு, யுத்தவீரர், பணம், உணவு முதலிய எவ்விதமான உதவியும் இந்தியர்களைச் செய்யவிடவு மாட்டாராம். எவ்வளவு பழுத்த இராஜவிசுவாசம்! இதன்பொருள் தானென்ன? ‘அண்ணன் சொல்லைத் தட்டவுமாட்டேன், பிடித்தபிடியை விடவுமாட்டேன்,

* கொற்றவன்=அரசன்.

என்ற பழமொழியே இவருக்குச் சரி. அந்த மகான் நியாயவாதப் பரீக்ஷையில் தேறி, நியாயவாதியாய் * இருந்தவராதலின், இன்னவிதமாய்ப் பேசினால் தப்பித்துக்கொள்ளலாமெனத் தெரிந்தவராகும். ஆதலின் இல்லாதவம்புகளை யெல்லாம் சொல்லாமற் சொல்லி அள்ளிவிடுவார். உடனே ஒத்து ஊதுபவர் கூட்டமும் தாளம் போடுபவர் கூட்டமும் அவரைச் சூழ்ந்துகொள்ளும். அப்படிப்பட்டோர் இக்காலத்தில் மிகுந்திருக்கும்பொழுது, அந்தக் காலத்தில், செட்டியார், தான் மேன்மையடைய எண்ணங்கொண்டு, தன்மகளால் இளவரசரை மயக்கிவிட்டாரென்றும், பெரியமஹாராஜா, தன் புத்திரனின் திருப்திக்காக செட்டியார் சம்மதியார் என்ற உள்ளெண்ணத்துடன் தூதனுப்ப, 'உம் என்றாளாம் காமாக்ஷி ஒட்டிக்கொண்டாளாம் மீனாக்ஷி' என்றபடி செட்டி சம்மதித்துவிட்டாரென்றும், பேராசைக்காரனென்றும் பல பேச்சுகளைப் பேசும் துவேஷிகள் இல்லாமலாயிருப்பார்கள்? அதற்குப் பயந்தும், தன் மனைவி சுற்றத்தார்க்கு அஞ்சியும் உண்மையை அறியவேண்டியுமே அவ்வளவு தூரம் மன்றாடினார். செட்டியார் ஒரே பிடிவாதமாக முடியாதென்று சாதித்துவிட்டாலும், 'அரசன் பிரத்தியக்ஷ தெய்வம்' என்றெண்ணும் இராஜ விசுவாசிகளான குடிகளும், மற்றும் கலப்பு விவாகத்தை ஆதரிப்பவர்களும் செட்டியாரை இலேசில் விடுவார்களா ?

---

* நியாயவாதி=வக்கீல்.

## ஐந்தாம் அத்தியாயம்

## சாஸ்திரச் சண்டை

---

மேற்கண்ட சம்பவங்கள் நடந்த இரண்டாவது நாள், அநேகம் சோதிட வல்லவர்களும், சாஸ்திர நிபுணர்களும் அரண்மனையைச் சார்ந்த ஒரு பெரிய மண்டபத்தில் வந்து நிறைந்திருந்தார்கள். அவர்களிற் சிலர், இந்த விவாகம் சாஸ்திரோக்தமானதல்ல வாகையினல் நிறைவேறக்கூடாது என்ருர்கள். அது நடை பெறுவதில் குற்றமில்லை எனச் சிலர் சொல்லிக் கொண்டார்கள்.

ஐயாசாமி ஐயர் :—“ஓய் சேஷையரே! என்னுங்காணம்! இந்த விவாகம் பொருத்தமானது தானென்று முகூர்த்தம் நிச்சயிக்க ஆரம்பித்து விட்டீரே. மஹாராஜா வரட்டும் சொல்லறேன். பிடிக்கிறேன் சண்டை. க்ஷத்ரியாள், வைஸ்யாளாத்தில் பெண்ணெடுப்பது என்ன முறைமை? இது ராஜ தர்மத்திற்கு அழகா?”

சேஷையர் :—“ஐயாசாமி வாத்யாரே! ராஜ தர்மமெல்லாம் நீர்தான் தெரிந்தவர். நான் அப்பொழுதே ஐயாசாமி வாத்யார் வேண்டாமென்று சொன்னேன் விகடர் கேட்டாரில்லை.”

விகடன் :—“அதென்ன ஐயா! விகடர் சமாச்

சாரமொன்றைச் சந்திக்கிழுக்கிறீர். விகடனென்றால் யாருக்குமே வயிற்றை வலிக்கத்தான் செய்கிறது. இல்லை, அப்படித்தான்."

சேஷையர் :—"ஐயாசாமி ஐயரை நான் அப்பொழுதே கூப்பிடவேண்டாமென்றுசொன்னேனே. நீர் மஹாராஜாவின் உத்தரவிருக்கிறதென்று சொல்லி விட்டீர். நல்ல காரியம் முடியப்போகும்பொழுது ஒத்தைப் பார்ப்பானாக எதிர் வந்துவிட்டார். நீர் இனி மஹாராஜனைப் அவரிடத்தில் சண்டைபோட்டு மண்டையை உடையும். அவருக்கும் உமக்குந்தான் பிடிக்கும்."

விகடன் :—"மண்டையை உடைக்கிறதா ? அது பிள்ளையார்சாமி கோவிலில். நான் அவரை, ஐயா-சாமி-என்று அருமையை அதிகமாக பிரயோகப்படுத்திக் கூட்டிவந்ததின் பெருமையை அவரன்றோ அறிவார்."

ஐயாசாமி ஐயர் :—"விகடரே! நீரும் பூணூல் போட்ட பிராமணனென்றுவந்து விட்டீரே! இந்தக் கலியாணம் உலகுக்கு ஒக்குமா? மஹாராஜா செட்டியார் வீட்டில் பெண்கொள்ளலாமா? மஹாராஜா வரட்டும். எனக்குத் தெரிந்தவற்றை பச்சை பச்சையாய்ச் சொல்லிவிடுகிறேன்."

விகடன் :—"ஏன்! பச்சைபச்சையாய்ச் சொல்லாவிட்டால் காய்ந்தது காய்ந்ததாய்ச் சொல்லிவிடுமே. மஹாராஜா வரட்டுமென்றீரே! நீர்தானே வறட்டக்கூடாதா ?